# தேசீய தமிழ் வாசகம்

## இரண்டாம் புத்தகம்

இரண்டாம் வகுப்புக்குரியது

T. P. கோபால கிருஷ்ணன், B. A., L. T.,
தலைமை ஆசிரியர், போர்டு உயர்நிலைப்பள்ளி, போளூர்.




வர்தா பதிப்புக் கழகம்
திருவல்லிக்கேணி :: சென்னை

[விலை 0–6–0

# முகவுரை

**தேசீய தமிழ் வாசகம்** என்னும் பெயருடன் வெளி வரும் இத்தொடக்க நிலைப்பள்ளி நூல்கள், கல்வித் துறையினர் வெளியிட்ட பாடத்திட்டத்தை அடிப்படையாகக் கொண்டவை. இவற்றுள் ஒன்ருன, இவ்விரண்டாம் நூல் முதல் நூலை அடிப்படையாகக் கொண்டு எழுந்தது.

முதல் நான்கு பக்கங்களில் படம் பார்த்து வாக்கியங்களைச் சொல்லிப் பழகும் பயிற்சி தரப்பட்டுள்ளது. அடுத்து எட்டு வாக்கிய பாடங்கள் தரப்பட்டுள்ளன. அவை எட்டு வேற்றுமைகளை அடிப்படையாகக் கொண்டு எழுந்தவை என்பது கவனிக்கத் தக்கது.

அடுத்து வரும் பதினுன்கு பாடங்கள் பிள்ளைகட்கு நன்கு தெரிந்த - தெரியவேண்டும் செய்திகள் அடங்கியவை. அவை பள்ளிக்கூடம், வகுப்பறை, பள்ளித் தோட்டம், பள்ளி விளையாட்டுக்கள், வினுவிடை, நான்கு திசைகள், சூரியன், சந்திரன், மழை, வாரம், மாதம், வருஷம் பற்றியவை. அவை அனைத்தும் வாக்கிய பாடங்களே.

அடுத்து வரும் இருபது பாடங்கள் மூன்று அல்லது நான்கு பத்திகளைக் கொண்ட சிறு பாடங்கள். அவை பிள்ளைகளே சொல்லுவது போல் அமைக்கப் பெற்றவை. இடையிடையே பலவகைப் பயிற்சிகளும் கதைப் பயிற்சிகளும் தரப்பட்டுள்ளன.

இவ்வகுப்பிற்கு ஏற்ற செய்யுட்கள் தேர்ந்தெடுத்துத் தரப்பட்டுள்ளன. அவை, பாரதியார், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை இவர்கள் பாக்களாகும். நூலின் இறுதியில் வழக்கம் போல, உலகநீதியும் ஆத்திசூடியும் அருஞ் சொற் பொருளுடன் தரப்பட்டுள்ளன.

கல்வித் துறையில் பல்லாண்டுகள் அநுபவமுடைய அறிஞர்கள் இந்நூல் வரிசையை நன்கு கவனித்து ஆசி கூற வேண்டுகின்றேன்.

இப் புத்தகத்தைத் தயாரிப்பதில் எனக்கு உதவி புரிந்த புலவர் திரு. பு. செல்வராசன் அவர்கட்கும், புலவர் திரு. சி. செல்வத் தாண்டவன் அவர்கட்கும் எனது நன்றி உரியதாகும்.

T. P. கோபால கிருஷ்ணன்

# பொருளடக்கம்


| எண் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|
| 1- 4. | படப் பயிற்சிகள் (1—4) | ... | 7—10 |
| 5-12. | வாக்கிய பாடங்கள் (1—8) | ... | 11—18 |
| 13. | பயிற்சி—1 (சுவைகள்) | ... | 19 |
| 14. | பாப்பா பாட்டு—1 | ... | 20 |
| 15. | எங்கள் பள்ளிக்கூடம் | ... | 21 |
| 16. | எங்கள் வகுப்பறை | ... | 22 |
| 17. | பள்ளிக்கூடத் தோட்டம் | ... | 23 |
| 18. | பள்ளிக்கூட விளையாட்டுக்கள் | ... | 24 |
| 19. | பயிற்சி—2 (நிறங்கள்) | ... | 25 |
| 20. | வேறுபாடு | ... | 26 |
| 21. | உண்டு—இல்லை | ... | 27 |
| 22. | ல—ள—ழ | ... | 28 |
| 23. | பசுவும் கன்றும்—(பாட்டு) | ... | 29 |
| 24. | கேள்வியும் பதிலும் | ... | 30 |
| 25. | ஒருமை—பன்மை | ... | 31 |
| 26. | நான்கு திசைகள் | ... | 32 |
| 27. | சூரியன் | ... | 33 |
| 28. | சந்திரன் | ... | 34 |
| 29. | மழை | ... | 35 |
| 30. | வாரம்—மாதம்—வருஷம் | ... | 36 |
| 31. | பயிற்சி—3 | ... | 37 |
| 32. | கிளி—(பாட்டு) | ... | 38 |
| 33. | எங்கள் கிராமம் | ... | 39 |

| எண் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|
| 34. | கிராம வீடுகள் | ... | 41 |
| 35. | கிராமத்தார் | ... | 43 |
| 36. | எங்கள் வீடு—1 | ... | 45 |
| 37. | எங்கள் வீடு—2 | ... | 47 |
| 38. | காக்கையும் வடையும் (படப் பயிற்சி) | ... | 49 |
| 39. | வீட்டுப் பொருள்கள்—1 | ... | 51 |
| 40. | வீட்டுப் பொருள்கள்—2 | ... | 53 |
| 41. | எங்கள் குடும்பம் | ... | 55 |
| 42. | சைக்கிள் வண்டி—(பாட்டு) | ... | 57 |
| 43. | நாணயங்கள் | ... | 59 |
| 44. | கடைத் தெரு—1 | ... | 61 |
| 45. | கடைத் தெரு—2 | ... | 63 |
| 46. | சிங்கமும் எருதுகளும் (படப் பயிற்சி) | ... | 65 |
| 47. | வீட்டு விலங்குகள் | ... | 67 |
| 48. | பறவைகள் | ... | 69 |
| 49. | அரங்கநாதன் செய்த உதவி | ... | 71 |
| 50. | பாப்பா பாட்டு—2 | ... | 73 |
| 51. | பயிற்சி—4 | ... | 74 |
| 52. | செய்யுட் பாடம் | | |
| | (1) உலக நீதி | ... | 75 |
| | (2) ஆத்திசூடி | ... | 76 |
| | குறிப்புரை | ... | 78 |

# இரண்டாம் வகுப்புக்குரியது

## 1. படப் பயிற்சி—1

### கிராமக் காட்சி

நீ இப்படத்தில் என்னென்ன பார்க்கிறாய்?



# 2. படப் பயிற்சி—2

படம் பார்த்து விவரம் சொல்.



# 3. படப் பயிற்சி—3

படம் பார்த்துப் பெயர் சொல்.













# 4. படப் பயிற்சி—4

## கிராமக் கைத்தொழில்கள்

படம் பார்த்து விவரம் சொல்.





## 5. வாக்கிய பாடங்கள்—1

| | | |
|---|---|---|
| தகப்பனுர் | சமையல் | துவைக்கிருன் |
| கடிதம் | செய்கிருர் | போடுகிருள் |
| எழுதுகிருர் | துணி | விளையாடுகிருள் |

1. தகப்பனுர் கடிதம் எழுதுகிருர்.
2. தாயார் சமையல் செய்கிருர்.
3. அண்ணன் துணி துவைக்கிருன்.
4. அக்காள் கோலம் போடுகிருள்.
5. தம்பி விளையாடுகிருன்.
6. தங்கை விளையாடுகிருள்.



# 6. வாக்கிய பாடங்கள்—2

| | | |
|---|---|---|
| உழவன் | பூங்காவனம் | பிடிக்கின்றன |
| உழுகிருன் | பறிக்கிருள் | வரைகிருர்கள் |
| தேங்காய் | திறக்கிருன் | பிள்ளேகள் |

1. உழவன் வயலே உழுகிருன்.
2. பூங்காவனம் பூக்களேப் பறிக்கிருள்.
3. பிள்ளேகள் படத்தை வரைகிருர்கள்.
4. குரங்கு தேங்காயைப் பறிக்கிறது.
5. பூனேகள் எலிகளேப் பிடிக்கின்றன.
6. கண்ணன் கதவைத் திறக்கிருன்.



# 7. வாக்கிய பாடங்கள்—3

| | | |
|---|---|---|
| பரந்தாமன் | ஏர் | தைக்கிருள் |
| வாள் | அறுக்கிருன் | முகர்கிறேன் |

1. பரந்தாமன் பேனுவால் எழுதுகிருன்.
2. உழவன் ஏரால் உழுகிருன்.
3. கமலம் ஊசியால் தைக்கிருள்.
4. தச்சன் வாளால் அறுக்கிருன்.
5. நான் மூக்கால் முகர்கிறேன்.
6. நான் கண்ணுல் பார்க்கிறேன்.



## 8. வாக்கிய பாடங்கள்—4

| | | |
|---|---|---|
| ஊற்று | மை | தீட்டு |
| வரதன் | வீட்டிற்கு | போடு |

1. செடிக்குத் தண்ணீர் ஊற்று.
2. குழந்தைக்குப் பால் கொடு.
3. கண்ணுக்கு மை தீட்டு.
4. பசுவுக்குப் புல் போடு.
5. தம்பிக்குச் சோறு போடு.
6. வரதன் வீட்டிற்கு வருகிறான்.



# 9. வாக்கிய பாடங்கள்—5

| | | |
|---|---|---|
| **வருகிறான்** | **எடுக்கிறாள்** | **மரத்திலிருந்து** |
| **மங்களம்** | **விழுகிறது** | **கிணற்றிலிருந்து** |
| **ஊரிலிருந்து** | **இறங்குகின்றன** | **குதிக்கிறேன்** |

வரதன் வீட்டிலிருந்து வருகிறான்.
மங்களம் கிணற்றிலிருந்து நீர் எடுக்கிறாள்.
இவர்கள் ஊரிலிருந்து வருகிறார்கள்.
பழம் மரத்திலிருந்து விழுகிறது.
குரங்குகள் மரத்திலிருந்து இறங்குகின்றன.
நான் திண்ணையிலிருந்து குதிக்கிறேன்.



## 10. வாக்கிய பாடங்கள்—6

| | | |
|---|---|---|
| என்னுடைய | வேடனுடைய | அவனுடைய |
| கண்ணனுடைய | உன்னுடைய | முருகனுடைய |

1. இது என்னுடைய பெட்டி.
2. அது அவனுடைய புத்தகம்.
3. இவை வேடனுடைய நாய்கள்.
4. அவை கண்ணனுடைய பசுக்கள்.
5. இது முருகனுடைய பொம்மை.
6. அது உன்னுடைய பை.



## 11. வாக்கிய பாடங்கள்—7

| | | |
|---|---|---|
| **குளத்தில்** | **மலர்கிறது** | **தொழுவில்** |
| **தூங்குகிறது** | **வாழ்கிறது** | **குழந்தை** |

1. குளத்தில் தாமரை மலர்கிறது.
2. கூடையில் பழங்கள் இருக்கின்றன.
3. பசு தொழுவில் நிற்கிறது.
4. குழந்தை தொட்டிலில் தூங்குகிறது.
5. மீன் நீரில் வாழ்கிறது.
6. புத்தகம் பெட்டியில் இருக்கிறது.



## 12. வாக்கிய பாடங்கள்—8

**தங்காய்** **எனக்கு** **வேண்டும்**

1. அண்ணா, இங்கு வா.
2. அக்கா, அங்கே போ.
3. தங்காய், புத்தகம் எடு.
4. தம்பீ, ஓடி வா.
5. அப்பா, எனக்குச் சட்டை வேண்டும்.
6. அம்மா, எனக்குச் சோறு போடு.

# 13. பயிற்சி—1

## (சுவைகள்)

| | | |
|---|---|---|
| இனிப்பு | புளிப்பு | கசப்பு |
| உவர்ப்பு | துவர்ப்பு | கார்ப்பு |

கட்டத்தில் உள்ளவற்றுள் ஏற்றதைக் கோடிட்ட இடத்தில் எழுதுக :—

1. சர்க்கரை ———.
2. பாக்கு ———.
3. உப்பு ———.
4. மிளகாய் ———.
5. பாகற்காய் ———.
6. எலுமிச்சம் பழம் ———.



## 14. பாப்பா பாட்டு—1

1. ஓடி விளையாடு பாப்பா—நீ
 ஒய்ந்திருக்க லாகாது பாப்பா.
 கூடி விளையாடு பாப்பா—ஒரு
 குழந்தையை வையாதே பாப்பா.

2. சின்னஞ் சிறுகுருவி போலே—நீ
 திரிந்து பறந்துவா பாப்பா.
 வண்ணப் பறவைகளைக் கண்டு—நீ
 மனத்தில் மகிழ்ச்சிகொள்ளு பாப்பா.

—பாரதியார்



# 15. எங்கள் பள்ளிக்கூடம்

| | | | |
|---|---|---|---|
| எங்கள் | மைதானம் | பின்புறம் | முன்புறம் |
| நல்லவை | நால்வர் | வளர்க்கும் | நாங்கள் |
| வேலை | உடம்பிற்கு | படிப்பு | அறிவை |

இது எங்கள் பள்ளிக்கூடம்.
பள்ளிக்கு முன்புறம் மைதானம் இருக்கிறது.
பள்ளிக்குப் பின்புறம் தோட்டம் இருக்கிறது.
பள்ளியில் நான்கு வகுப்புக்கள் இருக்கின்றன.
பள்ளியில் ஆசிரியர் நால்வர் இருக்கின்றனர்.
நாங்கள் வகுப்புக்களில் படிக்கிறோம்.
நாங்கள் தோட்டத்தில் வேலை செய்கிறோம்.
நாங்கள் மைதானத்தில் விளையாடுகிறோம்.
வேலையும் விளையாட்டும் உடம்பிற்கு நல்லவை.
படிப்பு அறிவை வளர்க்கும்.



# 16. எங்கள் வகுப்பறை

| | | |
|---|---|---|
| பக்கத்தில் | எதிரில் | கற்பிக்கிறார் |
| கவனிக்கிறோம் | பாடத்தை | நன்றாய் |

இது எங்கள் வகுப்பு அறை.
இவர் எங்கள் ஆசிரியர்.
இவருக்கு முன் மேசை இருக்கிறது.
இவருக்குப் பின் பீரோ இருக்கிறது.
இவருக்குப் பக்கத்தில் கரும்பலகை இருக்கிறது.
இவர் கரும்பலகையில் எழுதுவார்.
இவருக்கு எதிரில் நாங்கள் இருக்கிறோம்.
ஆசிரியர் பாடத்தைக் கற்பிக்கிறார்.
நாங்கள் பாடத்தைக் கவனிக்கிறோம்.
நாங்கள் நன்றாய்ப் படிக்கிறோம்.



# 17. பள்ளிக்கூடத் தோட்டம்

நிரம்ப          காய்க்கின்றன          மலர்கின்றன

இது எங்கள் பள்ளிக்கூடத் தோட்டம்.

இதில் வாழை, மா, பலா, மரங்களும், கத்திரி, வெண்டை, தக்காளிச் செடிகளும், புடலை, பூசனி, பாகற் கொடிகளும் இருக்கின்றன.

தோட்டத்தில் ரோஜா, மல்லிகை, சாமந்தி, சூரியகாந்திச் செடிகள் முதலியன இருக்கின்றன.

மரங்களிலும் செடிகளிலும் கொடிகளிலும் காய்கள் நிரம்பக் காய்க்கின்றன.

பூச் செடிகளில் பூக்கள் மலர்கின்றன.

நாங்கள் தோட்டவேலை செய்கிறோம்.



# 18. பள்ளிக்கூட விளையாட்டுக்கள்

| | | |
|---|---|---|
| மாலையில் | கைப்பந்து | ஆடுகின்றோம் |
| கால்பந்து | சறுக்கல் | உடற்பயிற்சி |

இது எங்கள் பள்ளிக்கூட மைதானம்.

நாங்கள் மைதானத்தில் மாலையில் விளையாடுகிறோம்.

நாங்கள் ஓடுகின்றோம்; கைப்பந்து ஆடுகின்றோம்; ஊஞ்சல் ஆடுகின்றோம்; கால்பந்து ஆடுகின்றோம்; சறுக்கல் ஆட்டம் ஆடுகின்றோம்.

எங்கள் ஆசிரியரும் எங்களுடன் ஆடுகிறார்.

நாங்கள் ஒரு மணிநேரம் விளையாடுகிறோம்.

ஓடுவதும் ஆடுவதும் உடற்பயிற்சி எனப்படும்.

உடற்பயிற்சி உடம்புக்கு நல்லது.

நீ உடற்பயிற்சி செய்கிறாயா?

# 19. பயிற்சி—2

## (நிறங்கள்)

| | | |
|---|---|---|
| கருமை | வெண்மை | நீலம் |
| மஞ்சள் | சிவப்பு | பச்சை |

கீழே கோடிட்ட ஒவ்வொரு இடத்திலும் மேற்கண்ட சொற்களில் ஏற்றதை அமைத்துப் படி :—

1. பால் ——— நிறம்.
2. காகம் ——— நிறம்.
3. இரத்தம் ——— நிறம்.
4. இலை ——— நிறம்.
5. மயில் ——— நிறம்.
6. சூரியகாந்தி ——— நிறம்.

# 20. வேறுபாடு

| | | | |
|---|---|---|---|
| மூங்கில் | உயரம் | குட்டை | நீளம் |
| கட்டை | கனம் | இலேசு | கரும்பு |



தென்னை வாழையைவிடப்
பெரியது.
வாழை தென்னையைவிடச்
சிறியது.
பெரியது—சிறியது



பீரோ மேசையைவிட உயரம்.
மேசை பீரோவைவிடக் குட்டை.
உயரம்—குட்டை




மூங்கில் கரும்பைவிட நீளம்.
கரும்பு மூங்கிலைவிடக் கட்டை.
நீளம்—கட்டை



மூட்டை பையைவிடக் கனம்.
பை மூட்டையைவிட இலேசு.
கனம்—இலேசு

# 21. உண்டு—இல்லை

| | | | |
|---|---|---|---|
| மாட்டுக்கு | குதிரைக்கு | துதிக்கை | வானத்தில் |
| கொம்பு | யானைக்கு | பூனைக்கு | பறக்கும் |



மாட்டுக்குக் கொம்பு
உண்டு.



குதிரைக்குக் கொம்பு
இல்லை.



யானைக்குத் துதிக்கை
உண்டு.



பூனைக்குத் துதிக்கை
இல்லை.



பூனை மரத்தில் ஏறும்.



புலி மரத்தில் ஏறுது.



காக்கை வானத்தில்
பறக்கும்.



கோழி வானத்தில்
பறக்காது.

# 22. ல—ள—ழ

| | | | |
|---|---|---|---|
| புலி | புளி | வால் | வாள் |
| வலை | வளை | மலை | மழை |





இது ஒரு புலி.

அது புளியம் பழம்.





இது பசுவின் வால்.

அது ஒரு வாள்.





இது ஒரு வலை.

அது ஒரு வளையல்.





இங்கு மலை இருக்கிறது.

அங்கு மழை பெய்கிறது



## 23. பசுவும் கன்றும்

(பாட்டு)

1. தோட்டத்தில் மேயுது
   வெள்ளைப் பசு—அங்கே
   துள்ளிக் குதிக்குது
   கன்றுக் குட்டி.

2. அம்மா என்குது
   வெள்ளைப் பசு—உடன்
   அண்டையில் ஓடுது
   கன்றுக் குட்டி.

3. நாவால் நக்குது
   வெள்ளைப் பசு—பாலை
   நன்றாய்க் குடிக்குது
   கன்றுக் குட்டி.

—கவிமணி, தேசிக விநாயகம் பிள்ளை



# 24. கேள்வியும் பதிலும்

**முருகா** **கமலா** **கணக்கு**
**ஜான்** **ரஹீம்** **செய்கிறாய்**

1. முருகா, நீ என்ன செய்கிறாய் ?
   நான் பாடம் படிக்கிறேன்.
2. கமலா, நீ என்ன செய்கிறாய் ?
   நான் கணக்குப் போடுகிறேன்.
3. ஜான், நீ என்ன செய்கிறாய் ?
   நான் படம் போடுகிறேன்.
4. ரஹீம், நீ என்ன செய்கிறாய் ?
   நான் பாடம் எழுதுகிறேன்.

# 25. ஒருமை—பன்மை



நான் ஒரு சிறுவன்

நாங்கள் சிறுவர்கள்





நீ ஒரு பெண்

நீங்கள் பெண்கள்





இவன் ஒரு சிறுவன்

இவர்கள் சிறுவர்கள்





அவள் ஒரு பெண்

அவர்கள் பெண்கள்





இது ஒரு நாய்

இவை நாய்கள்






# 26. நான்கு திசைகள்

| | | | |
|---|---|---|---|
| தோன்றும் | இடக்கை | கிழக்கு | மறையும் |
| மேற்கு | வடக்கு | நேராக | நீட்டு |
| வலக்கை | தெற்கு | பார்த்து | திசை |

சூரியன் காலையில் தோன்றும்.
சூரியன் தோன்றும் பக்கம் கிழக்கு.
சூரியன் மாலையில் மறையும்.
சூரியன் மறையும் பக்கம் மேற்கு.
நீ கிழக்குப் பக்கம் பார்த்து நில்.
நீ உன் கைகளை நேராக நீட்டு.
உன் வலக்கைப் பக்கம் தெற்கு.
உன் இடக்கைப் பக்கம் வடக்கு.
கிழக்கு—மேற்கு—தெற்கு—வடக்கு
இவை நான்கு திசைகள் எனப்படும்.



# 27. சூரியன்

| | | | |
|---|---|---|---|
| வானத்தில் | நடுப்பகலில் | தலைக்குமேல் | தேவை |
| தோன்றும் | காலம் | வெளிச்சம் | வெப்பம் |

சூரியன் வானத்தில் தெரிகிறது.
சூரியன் காலையில் கிழக்கில் தோன்றும்.
அது நடுப்பகலில் தலைக்குமேல் இருக்கும்.
அது மாலையில் மேற்கில் இருக்கும்.
சூரியன் வெப்பம் தருகிறது.
அது வெளிச்சமும் தருகிறது.
வெப்பமும் வெளிச்சமும் நமக்குத் தேவை.
சூரியன் தெரியும் காலம் பகல்.
சூரியன் தெரியாத காலம் இரவு.
பகலும் இரவும் சேர்ந்தது ஒரு நாள்.




# 28. சந்திரன்

| | | |
|---|---|---|
| நிலவு | நாளும் | அமாவாசை |
| வளர்பிறை | தேயும் | தேய்பிறை |

சந்திரன் இரவில் வானத்தில் தெரிகிறது.
சந்திரன் இரவில் வெளிச்சம் தருகிறது.
நாம் அதை நிலவு என்கிறோம்.
சந்திரன் தெரியாத நாளும் உண்டு.
அந்த நாளை அமாவாசை என்கிறோம்.
அமாவாசைக்குப் பிறகு சந்திரன் வளரும்.
நாம் அதனை வளர்பிறை என்கிறோம்.
முழுச் சந்திரனைப் பௌர்ணமி என்கிறோம்.
பௌர்ணமிக்குப் பிறகு சந்திரன் தேயும்.
நாம் அதனைத் தேய்பிறை என்கிறோம்.



# 29. மழை

| | | | |
|---|---|---|---|
| **கறுப்பு** | **மேகங்கள்** | **மறைக்கின்றன** | **இருண்டு** |
| **இடி** | **ஓசை** | **மின்னல்** | **துளிகள்** |
| **பெய்கின்றது** | **குளிர்** | **வீசுகிறது** | **தோன்றி** |

இன்று பகலில் சூரியன் தெரியவில்லை.
வானத்தில் கறுப்பு மேகங்கள் இருக்கின்றன.
மேகங்கள் சூரியனை மறைக்கின்றன.
வானம் கறுத்து இருக்கிறது.
இடி ஓசை கேட்கிறது.
மின்னல் தோன்றி மறைகிறது.
மழைத் துளிகள் விழுகின்றன.
மழை பெய்கின்றது.
குளிர்ந்த காற்று வீசுகிறது.
தெருவில் மழைநீர் ஓடுகிறது.

| விரோதி௵ | ஐப்பசி மீ | | | 1949 | | |
|---|---|---|---|---|---|---|
| ஞாயிறு | 1 | 8 | 15 | 22 | 29 | குறிப்புகள் |
| திங்கள் | 2 | 9 | 16 | 23 | 30 | ○ பௌர்ணமி 20ம் தேதி |
| செவ்வாய் | 3 | 10 | 17 | 24 | - | ● அமாவாசை 5ம் தேதி |
| புதன் | 4 | 11 | 18 | 25 | - | ☼ கிருத்திகை 2ம் தேதி |
| வியாழன் | 5 | 12 | 19 | 26 | - | 14ம் தேதி தீபாவளி |
| வெள்ளி | 6 | 13 | 20 | 27 | - | .... |
| சனி | 7 | 14 | 21 | 28 | - | .... |

## 30. வாரம்—மாதம்—வருஷம்

கிழமைகள்
ஞாயிறு
திங்கள்
செவ்வாய்
புதன்
வியாழன்
வெள்ளி
சனி
வாரம்
மாதம்
பன்னிரண்டு
வருஷம்
சித்திரை
வைகாசி
ஆனி
ஆடி
ஆவணி
புரட்டாசி
ஐப்பசி
கார்த்திகை
மார்கழி
தை
மாசி
பங்குனி

1. நாட்கள் அல்லது கிழமைகள் ஏழு: அவை ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்பன.

2. ஏழு நாட்கள் கொண்டது ஒரு வாரம்.

3. முப்பது நாட்கள் கொண்டது ஒரு மாதம்.

4. பன்னிரண்டு மாதகாலம் ஒரு வருஷம்.

5. சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி—இவை பன்னிரண்டு மாதங்களின் பெயர்கள்.

# 31. பயிற்சி—3

(1)

நீளம் உயரம் கனம் பெரியது

மேலுள்ள சொற்களுக்கு எதிர்ச் சொற்களைக் கீழுள்ள சொற்களிலிருந்து பொறுக்கிச் சொல் :—

இலேசு சிறியது கட்டை குட்டை

(2)

யானை மான் புலி மயில்

மேலுள்ள ஒவ்வொரு சொல்லுடன் கீழுள்ள சொற்களில் பொருத்தமானதைச் சேர்த்துப் படி :

கொம்பு துதிக்கை தோகை குட்டி

(3)

நான் நீ அவன் அது

மேலுள்ள ஒவ்வொரு சொல்லுடன் கீழுள்ள சொற்களில் பொருத்தமானதைச் சேர்த்துப் படி :

பாடுகிறான் ஓடுகிறது
பேசுகிறேன் படிக்கிறாய்



# 32. கிளி

## (பாட்டு)

1. பச்சைக் கிளியே வா வா
பாலும் சோறும் உண்ண வா
கொச்சி மஞ்சள் பூச வா
கொஞ்சி விளை யாட வா.

2. கவலை எல்லாம் நீங்கவே
களிப்பெழுந்து பொங்கவே
பவளவாய் திறந்து நீ
பாடுவாயோ தத்தம்மா.

3. வட்டமாயுன் கழுத்திலே
வானவில்லை ஆரமாய்
இட்ட மன்னர் யாரம்மா ?
யானறியக் கூறம்மா.



4. பையப் பையப் பறந்து வா
பாடிப் பாடிக்களித்து வா
கையில் வந் திருக்க வா
கனியருந்த ஓடி வா.

—கவிமணி, தேசிக விநாயகம் பிள்ளை



# 33. எங்கள் கிராமம்

| | | |
|---|---|---|
| **கிராமம்** | **ஊரார்** | **பயிர் வேலை** |
| **தெருக்கள்** | **குளிக்க** | **மரச்சாமான்கள்** |
| **இருநூறு** | **கால்நடைகள்** | **மண்பாத்திரங்கள்** |
| **மாடி** | **கிராமச்சாவடி** | **தொழிலாளிகள்** |
| **குடிசை** | **ஒற்றுமையாய்** | **ஆடைகள்** |

1. இது எங்கள் கிராமம். கிராமத்தில் பல தெருக்கள் இருக்கின்றன. கிராமத்தில் சுமார் இருநூறு வீடுகள் இருக்கின்றன. சில வீடுகள் மாடி வீடுகள்; சில வீடுகள் ஓட்டு வீடுகள்; சில வீடுகள் குடிசை வீடுகள்.

2. எங்கள் கிராமத்தில் பள்ளிக்கூடம் இருக்கிறது. ஊரார் குளிக்கக் குளம் இருக்

கிறது. கால் நடைகள் குளிக்கத் தனிக்குளம் இருக்கிறது. கிராமச் சாவடி இருக்கிறது.

3. கிராமத்தில் பயிர்வேலை செய்பவர்கள் இருக்கிறார்கள்; மரச் சாமான்கள், மண் பாத்திரங்கள், ஆடைகள் முதலியன செய்யும் தொழிலாளிகள் இருக்கிறார்கள். கிராமத்தில் எல்லோரும் ஒற்றுமையாய் வாழ்கிறார்கள்.

### பயிற்சி

(அ) பதில் கூறுக :—

1. இந்தக் கிராமத்தில் உள்ள தெருக்கள் எத்தனை?
2. கிராமத்தில் எத்தனை வீடுகள் இருக்கின்றன?
3. கிராமத்தில் வேறு என்னென்ன இருக்கின்றன?
4. கிராமத்தில் யார் யார் இருக்கின்றார்கள்?

(ஆ) இவற்றைப் படி :—

| | |
|---|---|
| வீடு | — வீடுகள் |
| தெரு | — தெருக்கள் |
| தொழிலாளி | — தொழிலாளிகள் |
| உழவன் | — உழவர் |

(இ) கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்துப் படி :—

1. கிராமத்தில் பயிர்வேலை செய்பவர்கள் ———.
2. கிராமத்தில் பல தெருக்கள் ———.
3. கிராமத்தில் பள்ளிக்கூடம் ———.
4. ஊரார் குளிக்கக் குளம் ———.



# 34. கிராம வீடுகள்

| | | | |
|---|---|---|---|
| நல்ல | காற்ருேட்டம் | மேடு | இல்லாதவை |
| பள்ளம் | உள்ளவை | சுத்தமாக | பரவும் |
| முற்றம் | வரிசை வரிசை | பூச்செடிகள் | பின்புறம் |

1. எங்கள் கிராமத்தில் உள்ள தெருக்கள் அகலமானவை; நல்ல காற்ருேட்டமும் வெளிச்சமும் உள்ளவை. தெருக்கள் மேடு பள்ளம் இல்லாதவை.

2. வீடுகள் வரிசை வரிசையாக இருக்கும். ஒவ்வொரு வீட்டிலும் சன்னல்கள் உண்டு; முற்றம் உண்டு. அவற்றின் வழியாகக் காற்றும் வெளிச்சமும் வீட்டில் பரவும். கிராமத்தார் தங்கள் வீடுகளேச் சுத்தமாக வைத்திருக்கிருர்கள்.

3. ஒவ்வொரு வீட்டின் பின்புறத்திலும் தோட்டம் உண்டு. தோட்டத்தில் கிணறும், வாழை, முருங்கை முதலிய மரங்களும் இருக்கின்றன. சிலர் தம் தோட்டங்களில் காய்கறிகள் பயிர் செய்கிருர்கள். சிலர் பூச்செடிகளை வளர்க்கிருர்கள்.

**பயிற்சி**

**(அ) பதில் கூறுக :—**

1. கிராமத்தில் தெருக்கள் எப்படி இருக்கின்றன ?
2. வீடுகள் எப்படி இருக்கின்றன ?
3. தோட்டங்களில் என்னென்ன பயிராகின்றன ?

**(ஆ) பதில் கூறுக :—**

1. உன் வீட்டில் அறைகள் எத்தனை ? சன்னல்கள் எத்தனை ?
2. உன் வீட்டில் தோட்டம் உண்டா ?
3. உன் வீட்டுத் தோட்டத்தில் என்னென்ன பயிராகின்றன ?
4. அவற்றின் உபயோகம் என்ன ?

(இ) வெளிச்சம் × இருட்டு
நல்ல × கெட்ட
இருப்பவை × இல்லாதவை
மேடு × பள்ளம்

இவை எதிர்ப்பதங்கள். இவற்றை மனப்பாடம் செய்.

**(ஈ) தக்க சொற்களைச் சேர்த்துப் படி :—**

| | |
|---|---|
| 1. நான் | படிக்கிருள் |
| 2. நீ | ஓடுகிருன் |
| 3. மாடு | எழுதுகிறேன் |
| 4. கமலம் | பாடுகிருய் |
| 5. கண்ணன் | மேய்கிறது |

# 35. கிராமத்தார்

| | | |
|---|---|---|
| தவருது | குளிப்பாட்டுவார்கள் | பலருக்கு |
| ஓரம் | கருத்தாக | எண்ணும் |
| மற்ருெரு | இராப்பள்ளிக்கூடம் | எழுத்தும் |

1. எங்கள் ஊரில் பல தொழில்களைச் செய்பவர்கள் இருக்கிருர்கள். அவர்கள் காலையில் ஊர்க்குளத்தில் குளிப்பார்கள்; மழைக் காலத்திலும் காலையில் தவருது குளிப்பார்கள்; துணிகளைத் துவைப்பார்கள்; சுத்தமாக இருப்பார்கள்.

2. ஊரின் ஓரத்தில் மற்ருெரு குளம் இருக்கிறது. ஆனல், அங்கு ஊரார் குளிப்பதில்லை. ஊரார் தங்கள் கால்நடைகளை அக் குளத்தில் குளிப்பாட்டுவார்கள்.

3. எங்கள் ஊரார் தொழிலாளிகள். அவர்கள் வேலையில் கருத்தாக இருப்பார்கள். அவர்களில் பலர் இராப் பள்ளிக்கூடத்தில் படிக்கிருர்கள். பலருக்கு எழுதப் படிக்கத் தெரியும். சிறிது கணக்கும் தெரியும். 'எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்' என்று அவர்கள் நினைக்கிருர்கள்.

## பயிற்சி

(அ) பதில் கூறுக :—

1. கிராமத்தார் காலையில் என்ன செய்வார்கள் ?
2. கிராமத்தில் உள்ள குளங்கள் எத்தனை ?
3. அவற்றின் உபயோகம் என்ன ?
4. கிராமத்தாரில் பலர் எங்குப் படிக்கிறார்கள் ?
5. அவர்கள் என்ன நினைக்கிறார்கள் ? அதன் பொருள் என்ன ?

(ஆ) பதில் கூறுக :—

1. உன் கிராமத்தில் உள்ள தொழிலாளர் யாவர் ?
2. உன் கிராமத்தார் படிக்கிறார்களா ?

(இ) இவற்றைப் படி :—

குளம் — குளத்தில்
வீடு — வீட்டில்
தெரு — தெருவில்
ஊர் — ஊரில்

(ஈ) கோடிட்ட இடத்தில் கீழ்வரும் சொற்களில் பொருத்தமானதைச் சேர்த்துப் படி :—

குளம் — சுத்தமாக — கால்நடைகள்

1. தெருக்கள் ——— இருக்கும்.
2. இது கிராமக் ———.
3. இது ——— குளிப்பாட்டும் குளம்.



# 36. எங்கள் வீடு—1

**சாமான்** **அரிசி** **மூட்டைகள்**
**பருப்பு** **பெரிய** **பூத்தொட்டி**

1. இது எங்கள் வீடு. எங்கள் வீடு கூரை வீடு. இதில் மூன்று அறைகள் இருக்கின்றன. ஒரு அறை படுக்கை அறை. அதில் பாய்கள், தலையணைகள், மெத்தைகள், பீரோ, மேசை, கண்ணாடி முதலியன இருக்கின்றன.

2. அடுத்த அறை சாமான் அறை. அதில் அரிசி மூட்டைகள், பருப்பு வகைகள், பெரிய பாத்திரங்கள் முதலியவை இருக்கின்றன. மூன்றும் அறை சமையல் அறை. அதில் அடுப்பு, அம்மி, சமையல் பாத்திரங்கள் முதலியன இருக்கின்றன.

3. வீட்டுக்குப் பின்புறத்தில் தோட்டம் இருக்கிறது. தோட்டத்தில் கிணறு, வாழை மரங்கள், மாமரங்கள், தென்னை மரங்கள் முதலியன இருக்கின்றன. பூத்தொட்டிகளும் இருக்கின்றன.

**பயிற்சி**

**(அ) விடை கூறுக :—**

1. படுக்கை அறையில் என்ன பொருள்கள் இருக்கின்றன ?
2. சாமான் அறையில் என்ன பொருள்கள் இருக்கின்றன ?
3. சமையல் அறையில் என்ன பொருள்கள் இருக்கின்றன ?
4. தோட்டத்தில் என்ன இருக்கின்றன ?

(ஆ) 1. படுக்கை, சாமான், சமையல், தலையணை— இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் பயன் படுத்துக.

2. இவற்றைப் படி :—

| | |
|---|---|
| வீடு — ஒன்று | அறை — அறைகள் |
| வீடுகள் — பல | தோட்டம் — தோட்டங்கள் |

**(இ) கோடிட்ட இடங்களில் கீழ்வரும் சொற்களை அமைத்துப் படி :—**

மரங்கள் — அறைகள் — சாமான்கள்

1. எங்கள் வீட்டில் மூன்று ———— இருக்கின்றன.
2. தோட்டத்தில் ———— இருக்கின்றன.
3. அறையில் ———— இருக்கின்றன.



# 37. எங்கள் வீடு—2

| | | |
|---|---|---|
| **செங்கல்** | **அடுக்கி** | **காய்ந்த** |
| **காய்ச்சுவார்கள்** | **இவற்றை** | **அவற்றை** |
| **தூலம்** | **சூளை** | **கொத்தர்கள்** |
| **பிசைந்து** | **உதவும்** | **வல்லவர்கள்** |

1. எங்கள் வீடு செங்கல் வீடு. செங்கல் எங்கள் ஊரில் செய்யப்படுகிறது. மண் பாண்டங்களைச் செய்பவர்கள் மண்ணைப் பிசைந்து செங்கல் செய்கிறார்கள்; செங்கற்களைக் காய வைக்கிறார்கள்; பிறகு அவற்றைச் சூளையில் அடுக்கிக் காய்ச்சுவார்கள். காய்ந்த செங்கற்கள் வீடு கட்ட உதவும். கொத்தர்கள் வீடு கட்டுவார்கள்.

2. எங்கள் வீடு ஓட்டு வீடு. ஓடும் எங்கள் ஊரில் செய்யப்படுகிறது. முன் சொன்னவர்

களை இவற்றையும் செய்து சூளையில் காய்ச்சு வார்கள். காய்ந்த ஓடுகளை வீட்டின் கூரை மீது போடுவார்கள்.

3. கதவு, தூண், தூலம், பலகைகள், சன்னல், கதவுகள் முதலியன மரத்தால் செய்யப்பட்டவை. எங்கள் ஊர்த்தச்சர்கள் இவற்றைச் செய்தார்கள். அவர்கள் மரவேலை யில் வல்லவர்கள்.

**பயிற்சி**

(அ) **பதில் கூறுக :—**

1. செங்கல் எப்படிச் செய்யப்படுகிறது ?
2. ஓடுகளைச் செய்பவர் யார் ?
3. செங்கல்லின் உபயோகம் என்ன ?
4. ஓட்டின் உபயோகம் என்ன ?
5. வீட்டுக்கு வேண்டும் மரச்சாமான்கள் எவை ?
6. எந்தத் தொழிலாளர்கள் இருந்தால் ஓட்டு வீட்டைக் கட்டி முடிக்கலாம் ?

(ஆ) 1. செங்கல், சூளை, பிசைந்து, மரத்தால்— இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறுக.

2. சுட்ட செங்கல் × சுடாத செங்கல்
காய்ந்த செங்கல் × காயாத செங்கல்
இவை எதிர்ப்பதங்கள். இவற்றைப் போல வேறு இரண்டு கூறுக.

(இ) **கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்துப் படி :—**

1. ஓடுகளைச் சூளையில் அடுக்கிக் ————.
2. செங்கல் ———— கட்ட உதவும்.
3. தச்சர்கள் மர ———— வல்லவர்கள்.

# 38. காக்கையும் வடையும்

## (படப் பயிற்சி)

படம் பார்த்துக் கதை சொல்.



## பயிற்சி

(அ) இக்கேள்விகளுக்குப் பதில் கூறுக :—

1. கிழவி என்ன செய்கிருள் ?
2. காகம் என்ன செய்கிறது ?
3. கிழவி எங்கே பார்க்கிருள் ?
4. காகம் என்ன செய்கிறது ?
5. காக்கை வடையுடன் எங்கு இருக்கிறது ?
6. மரத்தடியில் இருப்பது யாது ? அது காகத்தைப் பார்த்து என்ன சொல்லுகிறது ?
7. வடை ஏன் கீழே விழுகிறது ?
8. நரி தந்திரசாலி.— எப்படி ?

(ஆ) 1. இக்கதையைக் கிழவி சொல்வது போலக் கூறுக.
2. இக்கதையைக் காகம் சொல்வது போலக் கூறுக.
3. இக்கதையை நரி சொல்வது போலக் கூறுக.

(இ)

| | | |
|---|---|---|
| பறவை | விலங்கு | தின்பண்டம் |
| பறவாது | சுவை | பறக்கும் |

மேற்கண்ட சொற்களைக் கோடிட்ட இடங்களில் பொருத்தமாய் அமைத்துப் படி :

1. வடை ஒரு ———.
2. நரி ஒரு ———.
3. காகம் ஒரு ———.
4. நரி ———.
5. காகம் ———.
6. வடை ——— உள்ளது.



## 39. வீட்டுப் பொருள்கள்—1

**நெய்பவர்கள் நிலத்தில் இரும்புக்கரண்டி நெல் அரிவாள் தகரம் இரும்பு வேலை விளைந்தது**

1. படுக்கை அறையில் பீரோ இருக்கிறது. பீரோ மரத்தால் ஆனது. எங்கள் ஊர்த் தச்சர் அதைச் செய்தார். அவரே மேசையையும் செய்து கொடுத்தார். பீரோவில் துணிகள் இருக்கின்றன. மேசையில் புத்தகங்கள் இருக்கின்றன. பாய்கள் எங்கள் ஊரில் நெய்யப்பட்டவை. பாய் நெய்யும் தொழிலாளிகள் எங்கள் ஊரில் இருக்கிறார்கள். துணி நெய்பவர்களும் இருக்கிறார்கள்.

2. சாமான் அறையில் பல பெட்டிகள் உள்ளன. அவை தகரப் பெட்டிகள். தகரப்

பெட்டி செய்யும் தொழிலாளிகள் எங்கள் ஊரில் இருக்கிறார்கள். நெல் எங்கள் நிலத்தில் விளைந்தது. உழவர் நிலத்தை உழுது பயிர் செய்கின்றனர்; பருப்பு வகைகளையும் பயிர் செய்கின்றனர்.

3. சமையல் அறையில் உள்ள அரிவாள், இரும்புக் கரண்டி என்பவை கொல்லர் செய்தவை. கொல்லர் இரும்பு வேலை செய்பவர். அவர்களும் எங்கள் ஊரில் இருக்கிறார்கள். மூங்கில் வேலை செய்பவர்கள் கூடைகளையும் முறங்களையும் செய்கிறார்கள்.

### பயிற்சி

(அ) பதில் கூறுக :—

1. படுக்கை அறையில் உள்ள பொருள்கள் எவை?
2. தச்சர் செய்யும் (வீட்டுக்குத் தேவையான) பொருள்கள் எவை?
3. ஊரில் உள்ள பிற தொழிலாளர் யார் யார்?
4. அவர்கள் செய்யும் பொருள்கள் எவை எவை?
5. சட்டி, சன்னல், அரிவாள், வளையல், வேட்டி— இவற்றைச் செய்பவர் யார்?

(ஆ) 1. தொழிலாளி, உழவர், கொல்லர், தச்சர்— இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துப் படி.

2. பருப்பு வகைகள் நான்கின் பெயர்களைக் கூறுக.

3. தக்க சொற்களைச் சேர்த்துப் படி :—

| | | |
|---|---|---|
| தச்சர் | இரும்பை | செய்வார். |
| தட்டார் | மரத்தை | கட்டுவார். |
| கொத்தர் | பொன் வெள்ளி வேலை | அடிப்பார். |
| கொல்லர் | வீடு | அறுப்பார். |



# 40. வீட்டுப் பொருள்கள்—2

ஓலைக் கூடை முடைபவர் அகப்பை
செக்கார் எள் முத்துக்கொட்டை
ஆட்டுகிறார் செக்கடி எண்ணெய்
விளக்கெண்ணெய் மிகுதியாக நல்லெண்ணெய்

1. ஓலைக் கூடையும் தாலங் குடையும் கூடை முடைபவர் செய்தவை. கிணற்றில் உள்ள கயிறும் அகப்பையும் தென்னைமரத் தொழிலாளர் செய்தவை. இவர்கள் எங்கள் ஊரில் இருக்கிறார்கள்.

2. எங்கள் ஊரில் செக்கு இருக்கிறது. செக்கார் அதில் எள், தேங்காய், முத்துக் கொட்டை இவற்றை ஆட்டுகிறார்; செக்கடி யில் நல்லெண்ணெய், தேங்காய் எண்ணெய்,

விளக்கெண்ணெய் விற்கிருர். நாங்கள் அவரிடமே இந்த எண்ணெய்களை வாங்குகிறேம்.

3. நாங்கள் மண் பாத்திரங்களில் சமையல் செய்கிறேம். மண் பாத்திரங்களில் சமையல் செய்து சாப்பிடுவது உடம்பிற்கு நல்லதாம். எங்கள் ஊரில் எல்லோரும் மண் பாத்திரங்களை மிகுதியாக வாங்குகிருர்கள். எங்கள் ஊரில் மண் பாத்திரங்கள் செய்பவர்களும் இருக்கிருர்கள்.

பயிற்சி

(அ) பதில் கூறுக:—

1. ஓலைக்கூடை, தாலங்குடை—இவற்றைச் செய்பவர் யார்?
2. கயிறு, அகப்பை—இவற்றைச் செய்பவர் யார்?
3. செக்கார் என்பவர் யார்? அவர் எவற்றை விற்கிருர்?
4. மண் பாத்திரங்களின் சிறப்பு என்ன?

(ஆ) இவற்றைப் படி:—

1. தேங்காயிலிருந்து தேங்காய் எண்ணெய் கிடைக்கிறது.
2. எள்ளிலிருந்து நல்லெண்ணெய் கிடைக்கிறது.
3. முத்துக்கொட்டையிலிருந்து விளக்கெண்ணெய் கிடைக்கிறது.
4. வேர்க்கடலையிலிருந்து கடலை எண்ணெய் கிடைக்கிறது.

(இ) 1. உங்கள் வீட்டில் என்னென்ன எண்ணெய்களை உபயோகிக்கிருர்கள் என்பதைச் சொல்.

2. கூடை முடைதல், எண்ணெய் ஆட்டல், மண் பாத்திரம் செய்தல்—இவற்றுள் ஒன்றைக் கவனித்து, அது செய்யப்படும் முறையைக் கூறுக. (தெரிந்த அளவு)



# 41. எங்கள் குடும்பம்

| | | |
|---|---|---|
| எட்டாம் | கற்பிப்பாள் | கற்போம் |
| ஆரும் | சமயங்களில் | கடைக்கு |
| இரண்டாம் | எல்லோரும் | கவனித்து |

1. என் தகப்பனுர் படித்தவர். அவர் பயிர்வேலே செய்கிருர். என் தாயாரும் படித்தவர். அவர் வீட்டு வேலே செய்கிருர். என் அண்ணன் எட்டாம் வகுப்பில் படிக்கிருன். என் அக்காள் ஆரும் வகுப்பில் படிக்கிருள். நான் இரண்டாம் வகுப்பில் படிக்கிறேன்.

2. எனக்கு என் அக்காள் பாடம் கற்பிப்பாள். அவளுக்கு என் அண்ணன் கற்பிப்பான். அவனுக்கு என் தாயார் பாடம்

கற்பிப்பார். நாங்கள் எல்லோரும் சில சமயங்களில் தாயாரிடமும் தகப்பனரிடமும் பாடம் கற்போம்.

3. என் அண்ணன் தகப்பனருடன் தோட்ட வேலை செய்வான்; கடைக்குப் போய் வருவான். என் அக்காள் தாயாருடன் வீட்டு வேலைகளைச் செய்வாள். நானும் அக்காளும் பூச்செடிகளைக் கவனித்துக்கொள்வோம்.

### பயிற்சி

(அ) பதில் கூறுக :—

1. இந்தக் குடும்பத்தில் யார் யார் இருக்கிறார்கள் ?
2. ஒவ்வொருவர் செய்யும் வேலை என்ன ?
3. தகப்பனர், தாயார் இருவரும் படித்தவர். அதனால் பிள்ளைகளுக்கு என்ன நன்மை ?

(ஆ) 1. படித்தவர், கற்பிப்பார், கேட்போம், சமயம்— உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறுக.

2. படித்தவர் × படியாதவர்
செய்வான் × செய்யான்
} இவை எதிர்ப் பதங்கள். இவற்றை மனப்பாடம் செய்க.

(இ) கோடிட்ட இடங்களில் கீழ்வரும் சொற்களில் ஏற்றதை அமைத்துப் படி :—

படிக்கிறான் கற்பிப்பார் படிக்கிறேன்
கேட்போம். படிக்கிறாள்.

1. அண்ணன் எட்டாம் வகுப்பில் ——.
2. அக்காள் ஆறும் வகுப்பில் ——.
3. நான் இரண்டாம் வகுப்பில் ——.
4. தகப்பனர் எங்களுக்குப் பாடம் ——.
5. நாங்கள் தாயாரிடமும் தகப்பனரிடமும் பாடம் —.



## 42. சைக்கிள் வண்டி

(பாட்டு)

1. தங்கையே பார் தங்கையே பார்
சைக்கிள் வண்டி இதுவே பார்.
2. சிங்கார மான வண்டி
சீமையிலே செய்த வண்டி.
3. இரும்பாலே செய்த வண்டி
எங்கெங்கும் ஓடும் வண்டி.
4. மாடில்லை குதிரை இல்லை
மாயமதாய்ப் பறந்திடும் பார்.
5. தீயில்லை புகையும் இல்லை
தீவிரமாய் சென்றிடும் பார்.

6. காலாலே மிதிப்பதனுல்
கடும்விசையில் போயிடும் பார்.
7. ஒன்றன்பின் ஒன்ருக
உருளும்பை தாக்கஃளப் பார்.
8. அக்காளும் தங்கையும் போல்
அவைபோகும் அழகைப் பார்.

—கவிமணி, தேசிக விநாயகம் பிள்ளை

## பயிற்சி

(அ) இவற்றைப் படி :—

மாடு + இல்லை = மாடில்லை.
வீடு + இல்லை = வீடில்லை.
காசு + இல்லை = காசில்லை.

(ஆ) 1. உன் ஊரில் உள்ள வண்டிகளின் பெயர்களைக் கூறுக.

2. அவற்றின் உபயோகங்களைக் கூறுக.

(இ) கோடிட்ட இடங்களில் கீழ்வரும் சொற்களைப் பொருத்தமாக அமைத்துப் படி :

கப்பல் ஆகாயவிமானம் தண்டவாளம்

1. ரயில் —— த்தின் மேல் ஓடுகிறது.
2. —— வானத்தில் பறக்கிறது.
3. —— கடலில் போகிறது.

# 43. நாணயங்கள்

| | | | |
|---|---|---|---|
| காலணா | கிடைக்கும் | அரையணா | சேர்ந்தது |
| அரைக்கால் | நாணயம் | கலந்த | முக்கால் |




இது கால் அணா.




இது அரை அணா. ஓர் அரை அணாவுக்கு இரண்டு காலணாக்கள்.




இது ஓர் அணா நாணயம். இரண்டு அரையணாக்கள் சேர்ந்தது ஓர் அணா; நான்கு காலணாக்கள் சேர்ந்தது ஓர் அணா.




அது இரண்டணா நாணயம். அதனை அரைக்கால் ரூபாய் என்றும் சொல்லலாம். அதை மாற்றினால் இரண்டு அணாக்கள், அல்லது நான்கு அரையணாக்கள், அல்லது எட்டு காலணாக்கள் கிடைக்கும்.




இது கால் ரூபாய் நாணயம். இதன் மதிப்பு நான்கு அணா.




அது அரை ரூபாய் நாணயம். அதன் மதிப்பு எட்டு அணுக்கள்; இரண்டு கால் ரூபாய்கள்; நான்கு அரைக்கால் ரூபாய்கள்.




இது ஒரு ரூபாய் நாணயம். இதை மாற்றினுல் இரண்டு அரை ரூபாய்கள், அல்லது நான்கு கால் ரூபாய்கள், அல்லது எட்டு அரைக்கால் ரூபாய்கள், அல்லது பதினறு அணுக்கள், அல்லது முப்பத்திரண்டு அரையணுக்கள், அல்லது அறுபத்து நான்கு காலணுக்கள் கிடைக்கும். கால் ரூபாய், அரை ரூபாய், ஒரு ரூபாய் என்பவை வெள்ளி கலந்த நாணயங்கள்.

### பயிற்சி

(அ) பதில் கூறுக :—

1. ஒரு ரூபாய்க்கு எத்தனை அணுக்கள் ?
2. ஒரு ரூபாய்க்கு எத்தனை அரையணுக்கள் ?
3. ஒரு ரூபாய்க்கு எத்தனை காலணுக்கள் ?

(ஆ) கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்துப் படி :—

1. ஒரு அரை ரூபாய்க்கு ———— அரை அணுக்கள்.
2. ஒரு கால் ரூபாய்க்குப் ———— காலணுக்கள்.
3. ஒரு ரூபாய்க்கு ———— அணுக்கள்.
4. முக்கால் ரூபாய்க்குப் ———— அணுக்கள்.




# 44. கடைத் தெரு—1

| | | | |
|---|---|---|---|
| புடவைகள் | கோதுமை | கூஜா | குவளை |
| பலசரக்குக் கடை | வேர்க்கடலை | மிளகாய் | தினை |
| மருந்துக் கடை | துண்டுகள் | சோளம் | புளி |
| தானியக் கடை | ஆலையில் | சீரகம் | கடுகு |
| குத்துவிளக்கு | இட்டலிப் பானை | கேழ்வரகு | கம்பு |

1. எங்கள் ஊரில் சிறிய கடைத்தெரு இருக்கிறது. ஒரு வரிசையில் துணிக்கடை, பாத்திரக்கடை, தானியக் கடை, பலசரக்குக் கடை, எண்ணெய்க் கடை என்பவை இருக்கின்றன.

2. துணிக் கடைகளில் நெசவாளர் நெய்த வேட்டிகள், புடவைகள், துண்டுகள், மேல் வேட்டிகள் முதலியன இருக்கின்றன.

ஆலையில் தயாரான வேட்டிகள், புடவைகள், சட்டைத் துணிகள் முதலியனவும் இருக்கின்றன.

3. பாத்திரக்கடையில் அண்டா, தவலை, குடம், செம்பு, இட்டலிப்பானை, குவளை, சிறு பாத்திரங்கள், குத்துவிளக்கு, கூஜா முதலிய சாமான்கள் இருக்கின்றன.

4. தானியக் கடையில் அரிசி, சோளம், கேழ்வரகு, கம்பு, கோதுமை, தினை என்பவை இருக்கின்றன. பலசரக்குக் கடையில் பருப்பு வகைகள், புளி, மிளகாய், கடுகு, சீரகம் முதலிய பல சரக்குகளும் இருக்கின்றன.

5. எண்ணெய்க் கடையில் நல்லெண்ணெய், தேங்காய் எண்ணெய், விளக்கெண்ணெய், வேர்க்கடலை எண்ணெய் முதலியன இருக்கின்றன.

## பயிற்சி

**பதில் கூறுக :—**

1. இப்பாடத்தில் சொல்லப்படும் கடைகள் எவை?
2. துணிக்கடையில் என்னென்ன இருக்கின்றன?
3. பலசரக்குக் கடையில் உள்ள பொருள்கள் எவை?
4. தானியக்கடையில் விற்கப்படுவன யாவை?
5. எண்ணெய்க் கடையில் எவை விற்கப்படுகின்றன?
6. உங்கள் ஊரில் என்னென்ன கடைகள் இருக்கின்றன?




# 45. கடைத் தெரு—2

| | | |
|---|---|---|
| **தையற் கடை** | **இருவாட்சி** | **ஜிலேபி** |
| **பூக்கடை** | **முல்லைப் பூ** | **காராபூந்தி** |
| **தின்பண்டக் கடை** | **கனகாம்பரம்** | **அரைக்கீரை** |
| **காய்கறிக் கடை** | **நீலாம்பரம்** | **முளைக்கீரை** |
| **விற்பனை** | **தையல் யந்திரம்** | **அகத்திக்கீரை** |

1. கடைத் தெருவின் மற்றொரு வரிசையில் தையற்கடை, பூக்கடை, தின்பண்டக் கடை, காய்கறிக்கடை என்பன இருக்கின்றன.

2. தையற் கடைக்காரர், சட்டை மேற்சட்டை, கால்சட்டை, பாவாடை, இரவிக்கை, ஜாக்கெட் என்பவை தைக்கிறார். அவரிடம் தையல் யந்திரம் இருக்கிறது.

3. பூக்கடையில் மல்லிகைப் பூ, தாழம் பூ, ரோஜாப் பூ, கனகாம்பரம், நீலாம்பரம் என்

பவை இருக்கின்றன. கடைக்காரர் அவற்றைப் பட்டையாகவும், மாலையாகவும் கட்டுகிறார். மாலையில் அவை விற்பனை ஆகின்றன.

4. தின்பண்டக் கடையில் லட்டு, ஜிலேபி, வடை, முறுக்கு, காராபூந்தி, பகோடா முதலியவை விற்கப்படுகின்றன. லட்டும் ஜிலேபியும் நெய்யில் செய்யப்படுகின்றன. மற்றவை எண்ணெயில் செய்யப் படுகின்றன.

5. காய்கறிக் கடையில் கிராமத்தில் பயிராகும் எல்லாவகைக் காய்கறிகளும் கிடைக்கின்றன. அரைக்கீரை, முளைக்கீரை, அகத்திக்கீரை முதலியனவும் கிடைக்கின்றன.

### பயிற்சி

**(அ) பதில் கூறுக :—**

1. கடைத்தெருவின் மற்றொரு பக்கத்தில் என்னென்ன கடைகள் இருக்கின்றன?
2. தின்பண்டக் கடையில் என்னென்ன செய்யப் படுகின்றன?
3. பூக்கடையில் விற்கப்படும் பூக்கள் எவை?
4. உங்கள் ஊரில் என்னென்ன கடைகள் இருக்கின்றன?

**(ஆ) பொருத்தமான சொற்களைச் சேர்த்துப் படி :**

| | |
|---|---|
| 1. பாத்திரக் கடையில் | புடவை கிடைக்கும். |
| 2. தின்பண்டக்கடையில் | ரோஜா கிடைக்கும். |
| 3. துணிக் கடையில் | ஜிலேபி கிடைக்கும். |
| 4. பூக் கடையில் | அண்டா கிடைக்கும். |

# 46. சிங்கமும் எருதுகளும்

## (படப் பயிற்சி)

படம் பார்த்துக் கதை சொல்.



## பயிற்சி

(அ) ஒவ்வொரு படமும் பார்த்துக் கேள்விக்குப் பதில் கூறுக :—

1. சிங்கம் முதலில் எருதுகளுக்குப் பயந்தது—ஏன்?
2. பிறகு அது பயப்படவில்லை — ஏன் ?
3. இக்கதையால் நீ அறியும் நீதி யாது ?

(ஆ) காட்டில் சிங்கம் - எருதுகள் - ஒற்றுமை - சண்டை - தனித்தனி - மேய்ந்துகொண்டிருந்தன - சுலபமாக— இச்சொற்களைத் துணையாகக் கொண்டு, இக்கதையை எழுதுக.

(இ) கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்துப் படி :—

1. சிங்கம் ———— வாழும்.
2. மீன் ———— வாழும்.
3. காக்கை ———— வாழும்.
4. பாம்பு ———— வாழும்.

(ஈ) பொருத்தமான சொற்களைச் சேர்த்துப் படி :

| | |
|---|---|
| வாழை | சோலை |
| பலா | தோட்டம் |
| பனை | தோப்பு |
| தென்னை | காடு |

# 47. வீட்டு விலங்குகள்

| | | |
|---|---|---|
| **பசுப்பால்** | **சுண்ணும்பு** | **சலவைத் தொழிலாளி** |
| **கறக்கும்** | **வைக்கோல்** | **குடிக்கிருர்கள்** |
| **கடைந்து** | **பிண்ணுக்கு** | **ஆக்குகிருர்கள்** |
| **உருக்கிஞல்** | **சுமக்கும்** | **பிழைக்கிருர்கள்** |

1. எங்கள் கிராமத்தில் பசுக்கள் அதிகம். பசு கன்று போடும். பசு பால் கறக்கும். பசுப் பால் உடம்புக்கு நல்லது. ஆதலால் கிராமத் தார் பசுக்களே வளர்க்கிருர்கள்; பாலேக் குடிக் கிருர்கள்; பாலேக் காய்ச்சித் தயிர் ஆக்குகிருர் கள்; தயிரைக் கடைந்து மோர் ஆக்கு கிருர்கள்; வெண்ணெய் எடுக்கிருர்கள். வெண்ணெயை உருக்கிஞல் நெய் ஆகும்.

2. பெண் எருமைகளும் எங்கள் கிராமத் தில் உண்டு. அவற்றின் பால், பாலேக் கொண்டு செய்யப்பட்ட தயிர், மோர், வெண் ணெய், நெய் என்பவை பயன்படுகின்றன. ஊரார் சிலர் மேலே சொன்னவற்றை விற்றுப் பிழைக்கிருர்கள்.

3. எருதும் ஆண் எருமையும் ஏர் உழும்; வண்டி இழுக்கும். செங்கல், சுண்ணும்பு, நெல், காய்கறிகள் முதலிய வற்றை வண்டிகளில் ஏற்றிச் செல்லும். பசு, எருது, எருமை என்பவை புல், வைக்கோல், பிண்ணுக்கு இவற்றைத் தின்னும்.

4. கழுதை மூட்டை சுமக்கும். அது சலவைத் தொழிலாளிக்குப் பயன்படுகிறது. நாய் வீட்டைக் காக்கும்; தெருவைக் காக்கும்; ஊரைக் காக்கும். எங்கள் கிராமத்தில் நாய்களும் ஆடுகளும் அதிகம். ஆட்டுப் பால் உடம்புக்கு நல்லது.

### பயிற்சி

(அ) பதில் கூறுக :—

1. பசுவின் உபயோகம் என்ன ?
2. பெண் எருமையால் நமக்குப் பயன் யாது ?
3. எருதும் ஆண் எருமையும் நமக்கு எப்படி உதவுகின்றன ?
4. கழுதை, நாய், ஆடு—இவற்றின் உபயோகம் என்ன ?
5. பசுக்களை வைத்துக்கொண்டு ஒரு குடும்பம் பிழைக்கலாம்—எப்படி ?

(ஆ) பதில் கூறுக :—

1. உங்கள் ஊரில் என்ன விலங்குகள் இருக்கின்றன ?
2. அவை எப்படி உபயோகப்படுகின்றன ?

(இ) இவற்றைப் படி :—

அப்பா — ஆண்
அம்மா — பெண்
பசு — பெண் விலங்கு
எருது — ஆண் விலங்கு

பெண் × ஆண்
மகன் × மகள்
அவன் × அவள்

(ஈ) இவற்றைப் படி :—

பசு — பசுக் கன்று
எருமை — எருமைக் கன்று
கழுதை — கழுதைக் குட்டி
நாய் — நாய்க் குட்டி
ஆடு — ஆட்டுக் குட்டி



# 48. பறவைகள்

**அழுகிய மரக்கிளை கரைந்து கூட்டம்**
**பொரிக்கும் குஞ்சு வியாபாரம் தானியம்**

1. எங்கள் கிராமத்தில் காக்கைகள் உண்டு. காக்கை அழுகிய பொருள்களைத் தின்னும்; தெருவைச் சுத்தப்படுத்தும். அது மரக்கிளைகளில் கூடுகட்டும். ஒன்றுக்குச் சோறு போட்டால், அது எல்லாக் காக்கைகளையும் 'கா-கா' என்று கரைந்து, கூட்டம் சேர்த்துவிடும். காக்கைகள் ஒற்றுமையாக இருக்கும்.

2. எங்கள் கிராமத்தில், கோழிகளும், வாத்துக்களும் நிறைய இருக்கின்றன. ஆண் கோழிக்குச் சேவல் என்பது பெயர். அதற்குக் கொண்டை உண்டு. பெட்டைக்கோழி முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும். வாத்து

களும் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும். சிலர் இவற்றை வளர்த்து வியாபாரம் செய்கிறார்கள்.

3. குருவி மிகச் சிறிய பறவை. அது தானியங்களைத் தின்னும். கிளிகள் ஆல மரத்தில் கூடுகள் கட்டி வாழ்கின்றன. கிராமத்தில் சிலர் புறாக்களை வளர்த்து விற்கிறார்கள்; சிலர் கிளிகளை வளர்த்து விற்கிறார்கள். எங்கள் கிராமத்தில் கோழிகளும் வாத்துக்களுமே அதிகம்.

### பயிற்சி

(அ) பதில் கூறுக :—

1. காக்கையின் சிறந்த குணம் எது?
2. அது ஊருக்குச் செய்யும் நன்மை என்ன?
3. இருபது கோழிகளை வைத்துக்கொண்டு வியாபாரம் செய்யலாம்—எப்படி?

(ஆ) இவற்றைப் படி :—

1. நாய் குட்டி போடும்; பால் கொடுக்கும்.
2. கோழி முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும்; பால் கொடாது.
3. பசு கன்று போடும்; பால் கொடுக்கும்.
4. வாத்து முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும்; பால் கொடாது.

(இ) பொருத்தமான சொற்களைச் சேர்த்துப் படி :—

| | |
|---|---|
| 1. குதிரை | முட்டையிடும். |
| 2. புறா | குட்டிபோடும். |
| 3. நாய் | முட்டையிடும். |
| 4. வாத்து | குட்டிபோடும். |

# 49. அரங்கநாதன் செய்த உதவி

| | | |
|---|---|---|
| மாணவன் | இரக்கம் | கணக்கப்பிள்ளை |
| மாறினான் | தேறினான் | அமர்ந்தான் |
| அன்பு | வேலைக்காரன் | கற்பலகை |
| ஏழை | தினந்தோறும் | வருஷம் |

1. அரங்கநாதன் இரண்டாம் வகுப்பு மாணவன். அவன் மிகவும் நல்லவன்; பாடங்களை நன்றாய்ப் படிப்பவன். அவன் ஆசிரியரிடம் மரியாதையாய் நடந்துவந்தான்.

2. அரங்கநாதன் எல்லாப் பிள்ளைகளிடமும் அன்பு காட்டுவான்; ஏழைப் பிள்ளைகளிடம் இரக்கம் காட்டுவான்; அவர்களுக்கு வேண்டும் உதவிகள் செய்வான்.

3. அவன் வீட்டில் ஒரு வேலைக்காரன் இருந்தான். அரங்கநாதன் அவன் மகனைப் பள்ளியில் சேர்த்தான்; புத்தகமும் கற்பலகையும் வாங்கித் தந்தான்; தினந்தோறும் அவனுக்குத் தன்வீட்டில் பாடம் கற்பித்தான்.

4. வேலைக்காரன் மகன் கவனத்துடன் படித்தான்; ஒவ்வொரு வருஷமும் மேல் வகுப்புக்கு மாறினான்; முடிவில் பத்தாம் வகுப்பில் தேறினான்; அரங்கநாதனிடமே

கணக்கப் பிள்ளையாக அமர்ந்தான். நீங்கள் அரங்கநாதனைப்போல ஏழைகளுக்கு உதவி செய்வீர்களா ?

### பயிற்சி

(அ) பதில் கூறுக :—

1. அரங்கநாதன் ஆசிரியரிடம் எப்படி நடந்து கொண்டான் ?
2. அவன் வகுப்புப் பிள்ளைகளிடம் எப்படி நடந்தான் ?
3. அவன் யாரிடம் இரக்கம் காட்டினான் ?
4. வேலைக்காரன் மகனுக்கு அவன் செய்த உதவி யாது ?
5. நீ அவனைப் போல உதவி செய்வாயா ?

(ஆ) 1. இப்பாடச் செய்தியை அரங்கநாதனே சொல்வது போலக் கூறுக.
2. இதனை வேலைக்காரன் சொல்வது போலக் கூறுக.
3. இதனை வேலைக்காரன் மகன் சொல்வது போலக் கூறுக.

(இ) பதில் கூறுக :—

1. உன் பள்ளியில் காலை எத்தனை மணி முதல் வேலை தொடங்குகிறது ?
2. உன் நண்பர்கள் பெயர்களைக் கூறுக.
3. நீ யாருக்காவது உதவி செய்ததுண்டா ?
4. ஏழைகளுக்கு உதவி செய்வது உன் கடமை அல்லவா ?

# 50. பாப்பா பாட்டு—2

பொய் சொல்லக்கூடாது பாப்பா !—என்றும்
புறஞ்சொல்ல லாகாது பாப்பா !
தெய்வம் நமக்குத் துணை பாப்பா—ஒரு
தீங்கும்வர மாட்டாது பாப்பா. (1)

துன்பம் நெருங்கிவந்த போதும்—நாம்
சோர்ந்துவிட லாகாது பாப்பா !
அன்பு மிகுந்ததெய்வ முண்டு—துன்பம்
அத்தனையும் போக்கிவிடும் பாப்பா. (2)

சோம்பல் மிகக்கெடுதி பாப்பா—தாய்
சொன்னசொல்லைத் தட்டாதே பாப்பா !
தேம்பி அழுங்குழந்தை நொண்டி ;—நீ
திடங்கொண்டு போராடு பாப்பா ! (3)

காலை யெழுந்தவுடன் படிப்பு—பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு—என்று
வழக்கப்படுத்திக் கொள்ளு பாப்பா. (4)

—பாரதியார்

# 51. பயிற்சி—4

உன் பெயர் என்ன ?

என் பெயர்................................

உன் தகப்பனரின் பெயர் என்ன ?

என் தகப்பனரின் பெயர்.................

உன் தகப்பனர் என்ன வேலே செய்கிருர் ?

என் தகப்பனர்..........................

உன் தாயாரின் பெயர் என்ன ?

என் தாயாரின் பெயர்....................

உன் தெருவின் பெயர் என்ன ?

என் தெருவின் பெயர்....................

உன் ஊரின் பெயர் யாது ?

என் ஊரின் பெயர்.......................

உன் வயது என்ன ?

என் வயது..............................

# 52. செய்யுள் பாடம்

## 1. உலக நீதி

1. ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்.
2. ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்.
3. மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்.
4. வஞ்சனைகள் செய்வாரோ(டு) இணங்க
[வேண்டாம்.
5. நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்.
6. நல்லிணக்கம் இல்லாரோ(டு) இணங்க
[வேண்டாம்.
7. அடுத்தவரை ஒருநாளும் கெடுக்க வேண்டாம்.
8. மனம்போன போக்கெல்லாம் போக வேண்டாம்.
9. தனம் தேடி உண்ணாமல் புதைக்க வேண்டாம்.
10. குற்றமொன்றும் பாராட்டித் திரிய வேண்டாம்.
11. கற்றவரை ஒருநாளும் பழிக்க வேண்டாம்.
12. மதியாதார் தலைவாசல் மிதிக்க வேண்டாம்.
13. மூத்தோர்சொல் வார்த்தைதனை மறக்க
[வேண்டாம்.
14. கருதாமல் கருமங்கள் முடிக்க வேண்டாம்.
15. சேராத இடந்தனிலே சேர வேண்டாம்.
16. செய்தநன்றி ஒருநாளும் மறக்க வேண்டாம்.
17. தெய்வத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்.
18. இறந்தாலும் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்.

## 2. ஆத்திசூடி

1. அறம் செய விரும்பு.
2. ஆறுவது சினம்.
3. ஊக்கமது கைவிடேல்.
4. எண்ணெழுத்(து) இகழேல்.
5. ஏற்ப(து) இகழ்ச்சி.
6. ஓதுவ(து) ஒழியேல்.
7. கண்டொன்று சொல்லேல்.
8. இணக்கமறிந்(து) இணங்கு.
9. தந்தை தாய்ப் பேண்.
10. நன்றி மறவேல்.
11. வஞ்சகம் பேசேல்.
12. இளமையில் கல்.
13. கீழ்மை அகற்று.
14. குணமது கைவிடேல்.
15. கெடுப்ப(து) ஒழி.
16. சான்றோர் இனத்(து) இரு.
17. சுளிக்கச் சொல்லேல்.
18. சூது விரும்பேல்.

19. செய்வன திருந்தச் செய்.
20. சேரிடம் அறிந்து சேர்.
21. சோம்பித் திரியேல்.
22. தெய்வம் இகழேல்.
23. நன்மை கடைப்பிடி.
24. நூல் பல கல்.
25. நோய்க்(கு) இடம் கொடேல்.
26. வித்தை விரும்பு.
27. உத்தமனாய் இரு.
28. வைகறைத் துயில் எழு.

# குறிப்புரை

## 1. உலகநீதி

1. ஓதாமல் - படியாமல், கற்காமல்.
2. பொல்லாங்கு - தீமை, குற்றம்.
3. மாதா - தாய்.
4. வஞ்சனை-ஏமாற்றம், கபடம். இணங்க-நட்பாகப் பழக, சிநேகமாயிருக்க.
5. நெஞ்சார - நெஞ்சு + ஆர - மனம் சம்மதித்து, மனம் பொருந்தி. பொய்தன்னை - பொய்யை.
6. நல் இணக்கம் - நல்ல நட்பு, நல்ல சிநேகம்.
7. அடுத்தவர் - அண்டிவந்தவர்.
8. போக்கு - வழி.
9. தனம் - செல்வம், பணம். தேடி - சம்பாதித்து.
10. குற்றம் - குறை, தவறு. பாராட்டி - பெரிதாக நினைத்து.
11. கற்றவரை - படித்தவரை. பழிக்க - குறைசொல்ல.
12. மதியாதார் - மரியாதை காட்டாதவர்.
13. மூத்தோர் - அறிவிலும் வயதிலும் பெரியவர். சொல் - சொல்லுகிற.

14. கருதாமல் - முன் ஆலோசனை செய்யாமல். கருமங்கள் - செயல்கள், காரியங்கள். முடிக்க - நிறைவேற்ற.

15. சேராத - சேரத் தகாத.

16. நன்றி - உபகாரம்.

17. இறந்தாலும் - சாவதானாலும், சாகும்படி நேர்ந் தாலும்.

## 2. ஆத்திசூடி

1. அறம் - தருமம், கடமை. விரும்பு - ஆசைப்படு.

2. ஆறுவது - தணிவது (தணிய வேண்டுவது.) சினம் - கோபம்.

3. ஊக்கம் - உற்சாகம்.

4. எண் - கணித நூல். எழுத்து - இலக்கண நூல்.

5. ஏற்பது - பிச்சை கேட்டுப் பெறுவது.

6. ஓதுவது - கற்பது. ஒழியேல் - விடாதே.

7. ஒன்று - வேறு ஒன்று, மற்றொன்று.

8. இணக்கம் - நட்பு, சிநேகம். இணங்கு - சிநேகம் செய்.

9. பேண் - காப்பாற்று.

10. நன்றி - உபகாரம், நன்மை.

11. வஞ்சகம் - கபடமான வார்த்தைகள், ஏமாற்றம்.

12. இளமையில்-குழந்தைப் பருவத்தில், சிறுவயதில்.
13. கீழ்மை - இழிவு, இழிவான குணம். அகற்று - நீக்கு.
14. குணம் - சிறந்த குணம்.
15. கெடுப்பது - கெடுதி செய்வது.
16. சான்றோர் - மேன்மைக் குணமுடையோர். இனத்து - கூட்டத்திலே.
17. சுளிக்க - கோபிக்கும்படி.
18. சூது - சூதாடுதல்.
19. திருந்த - திருத்தமாக.
20. சேரிடம் - பழகவேண்டும் இடம்.
21. சோம்பி - சோம்பலாக.
22. இகழேல் - இழிவாகப் பேசாதே.
23. கடைப்பிடி - உறுதியாகப் பிடித்துக்கொள்.
24. நூல் - அறிவை வளர்க்கும் புத்தகம்.
25. இடங்கொடேல் - இடம் கொடுக்காதே.
26. வித்தை - கல்வி.
27. உத்தமனாய் - நல்ல குணம் உடையவனாக.
28. வைகறை - விடியற்காலம். துயில் - உறக்கம். துயில் எழு - உறக்கம்விட்டு எழுந்திரு.



# DESEEYA TAMIL VACHAGAM

**BOOK II FOR STANDARD II**

*By*

T. P. GOPALAKRISHNAN, B.A., L.T.

*Headmaster, Board High School, Polur*

**Price : As. 6/-**

---

*Copies can be had at :*

54, SWAMI NAICKEN STREET

CHINTADRIPET, MADRAS - 2